# கல்வெட்டு

திருவள்ளுவராண்டு-2022 (பிரமோதூத ஆண்டு) கார்த்திகைத் திங்க



காலாண்டிதழ் - 28 ★ (1990, நவம்பர் திங்கள்) ★ விலை ரூ. 1-5
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

உள்ளே......


பக்கம்

1 KANDA GOPALAN MADAI ... 1
—Natana. Kasinathan

2 தஞ்சைப் பெருவுடையார் கோயிலும் மராட்டிய மன்னர்களும் ... 5
—கு. தாமோதரன்

3 திறல்நகர்க் கல்வெட்டு ... 12
—தே. கோபாலன்

4 பார்த்திவசேகரபுரம் ... 18
—மா. செந்தில் செல்வக்குமரன்

5 இராமநாதபுரம் மூலைக் கொத்தளம் ... 24
—ரா. நாராயணன்

6 நிலவிற்பனை ஆவணம் ... 30
—செ. மா. கணபதி

7 தொல்பொருள் ஆய்வுத்துறையின் அண்மைக் காலக் கண்டுபிடிப்புகள் ... 39

# KANDA GOPALAN MADAI

**Natana. Kasinathan**
Director

The Coin hoard found at Varadarajanpettai, near Kurinjippadi in South Arcot District consists of six Ganga Coins, 70 Coins identified as the issues of Ganapathi of Kakathiya dynasty and about 20 Panam of Vijayanagar period. There are 13 gold ornaments like bangles or rings and a few gold pieces along with these coins.

While informing this important find to the public this author had identified one set of coins as the issues of Kakathiya King Ganapathi;[1] as he had read the legend engraved on them as 'Kanapa'. But after having thoroughly examined the same coins, he has come to the conclusion that these coins are the "Kandagopalan Madai", found mentioned in inscriptions.

The legend written on the obverse of the coin is to be read as "Kanda" instead of "Kanapa" as the last letter does not have the straight second line for 'Pa' which is usually found in Chola characters. The fourth letter 'ti' for Ganapathi is not found in any one of the coins of this hoard.

Further on the obverse of this coin there is a figure of 'Gopala' in topsyturvy position playing a flute in

standing posture, below the legend. Both the legend "Kanda" and the figure of "Gopala" seems to have been made, intentionally to denote the name "Kanda Gopala". On the basis of this clue we can combine both legend and the figure and identify some of the coins. The figures of sun, moon and umbrella are also found. The letter 'Sri' written in Telugu character is both used as a prefix and suffix to legend.

There were two issues of Kandagopalan Madai, *viz.* Kandagopalan Palamadai and Kandagopalan Pudumadai. Kandagopalan Palamadai seems to have been the earlier issue on the basis of its name. But in inscriptions it occurs after the issue of Pudumadai, new issue. Kandagopalan Pudumadai is referred to even in 1184 A.D.[2] In another inscription a Kandagopalan Madai which may be either old one or new one is mentioned in 1181 A.D. itself.[3] Kandagopalan Vasipada Pudumadai occurs in C. 1259 A.D.[4] Hence it seems that the Kandagopalan new issue was in current from C. 1184 A.D. to C. 1259 A.D. Kandagopalan old issue also was current simultaneously.

It is difficult to identify the issues of Kandagopalan Madai or the Kandagopalan Pudumadai which were in existence during 1181 to 1184 A.D. respectively.

In the geneology of Telugu Chola Kings it is found that there were three kings having the title Kanda Gopalan. Tikka I *alias* Tirukkalattidevan *alias* Kanda Gopalan who ruled Kanchi from 1223 A.D. to 1250 A.D.

Manmasiddhi II *alias* Vijayakandagopalan who ruled from 1250 to 1291 A.D. and Virakandagopalan who ruled from 1291 to 1297 A.D. were those three Kings. As the later two kings had their names as Vijayakandagopala and Virakandagopala they could not have issued these coins which are bearing the legend only Kandagopalan. Hence it is obvious that Tikka I *alias* Kandagopalan must have been the issuer of this coin, which were in existence during 13th century. He served as a vassal for Cholas in the beginning and seems to have ruled independently later. He was a staunch Vaishnavaite. He had endowed many gifts to God Varadarajapperumal at Kanchipuram.

He had instituted a service called "Kanda Gopalan Sandhi"[5] in Arulala temple, Kanchipuram probably after his name. His queen Lakshmidevi was also a Vaishnavite. It is stated in an inscription that she had gifted lands to the temple. It is also stated that boundary stones were planted demarcating the gifted land by fixing stones with the figure of "Kanda Gopalan".[6] A village known as "Kanda Gopalan Chaturvedi-mangalam"[7] seems to have been in existence during his period.

The occurrence of Kandagopalan madai coin assumes importance as this is the first discovery of this issue. These coins have been accidentally found by an uneducated villager. These are all gold coins and were die-struck. Some zigzag lines are found on the reverse.

The method of casting legends on coins by die-struck process was prevalent in Deccan only and not in Tamilnadu. There are some coins of Rajendrachola which are die-struck. But they were found in Deccan region only. Hence this Kandagopalan madai was also to have been minted in Deccan. Another important feature of this coin is the shape which has a cavity in centre. This cavity might have been formed in the minting process of the coin.

Before the discovery of this coin hoard there seems to have been only one coin of this type in the collection of Thiru. Arumugam a coin collector of Trichy. Tamilnadu State Department of Archaeology has a photograph of that coin in its photo album. But it has not been identified before and the provenance of it and the metal are also unknown. A photograph of a coin of this type is found illustrated in Elliot's book *Coinage of South India*. But it has not been identified by him also.

*Foot-notes*

1. Natana. Kasinathan, Ancient coins discoverd, Hindu, dated 10-3-1989. These coins were first examined by M. Chandramurthy, Registering Officer of this department.
2. ARE 561 of 1912.
3. Ibid No. 560.
4. ARE 432, 434 of 1919.
5. Ibid 607 of 1919.
6. Ibid 415 of 1919.
7. The Colas, K. A. Nilakanta Sastri, 387-88.

———

# தஞ்சைப் பெருவுடையார் கோயிலும் மராட்டிய மன்னர்களும்

கு. தாமோதரன், எம்.ஏ.,
துணை இயக்குநர்.

பெருவுடையார் கோயிலுக்கு மராட்டிய மன்னர்கள் பல திருப்பணிகளைச் செய்துள்ளனர். அதிலும் சிறப்பாக இரண்டாம் சரபோஜியும், கடைசி தஞ்சை மராட்டிய மன்னனான சிவாஜியும் செய்துள்ள சமயப்பணி போற்றுதற்குரிய ஒன்றாகும். பெருவுடையார் கோயில் கிழக்குப் பக்க அரைவட்ட வடிவமான நுழைவாயில் (முதல்) மராட்டிய மன்னர்களால் கட்டப்பெற்றதாகும். இதை அடுத்துள்ள இராஜராஜன், கேரளாந்தகன் திருவாயில்களைக் கடந்து உள்ளே சென்றால் நமக்குத் தெளிவாகத் தெரிவது நந்தி மண்டபம். நடுவே நந்தியம் பெருமான் யாரையும் சட்டை செய்யாமல் மிகவும் கம்பீரமாக தன்னுடைய தலைவியையே பார்த்தவண்ணம் உள்ளார். இந்நந்தி ஒரே கல்லால் செய்யப்பெற்றது. இது நாயக்கர் கலைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக உள்ளது. இந்த மண்டபத்தின் மேல் விதானத்தில் தீட்டப்பெற்றுள்ள மலர்களும், இதர வண்ணவடிவங் களும் பிற்கால மராட்டியர் காலத்தைச் சார்ந்தவைகளாகும். நந்தி மண்டபத்தின் வடமேற்கு மூலையில் பெரியநாயகி திருக்கோயில் உள்ளது. இது பிற்கால பாண்டியர்கள் காலத்தில் கட்டப்பெற்ற தாகக் கூறப்படுகிறது. பெரியநாயகி சிற்பம் சோழர்கள் காலத்தைச் சேர்ந்ததாக இருந்தாலும், திருக்கோயில் பிற்கால பாண்டியர்கள் காலத்தது என்று வரலாற்று அறிஞர்கள் கருதுகின்றனர். இக் கோயிலின் முன் பெரிய மண்டபம் உள்ளது. இந்த மண்டபத்தின் கிழக்கு, மேற்கு, நடுப்பகுதியின் மேல் விதானத்தில் ஓவியங்கள் தீட்டப்பெற்றுள்ளன. இவ்வோவியங்கள் மராட்டியர் காலத்தைச் சார்ந்தவை. மேற்குப் பக்கத்தில் அஃதாவது பள்ளியறை மண்டபத்தின் மேல் விதானத்தில் தட்சண் யாகம் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளது.

நடுப்பகுதியில் நவராத்திரி நாட்களில் தேவியின் பல்வகை நிகழ்ச்சிகளை சித்தரிக்கின்ற காட்சி ஓவியமாக தீட்டப்பெற்றுள்ளது. கிழக்குப் பக்கத்தில் மார்க்கண்டேயர் காட்சி தீட்டப்பெற்றுள்ளது. இது தவிர மேற்குப்பக்கம் உள்ள, மேற்குப் பக்கச் சுவற்றில் ஓவியம் தீட்டப்பெற்றுள்ளது. இவை கல்பதிக்கப்பெற்ற தஞ்சை ஓவியங்களாகும். ஓவியம் தீட்டப்பெற்றுள்ள மகாமண்டபத்தில் இருந்து அர்த்த மண்டபத்தின் நுழைவாயிலின் இரண்டு பக்கங்களிலும் சுதை உருவங்கள் அழகு செய்கின்றன.

**மகாமண்டபத்தின் நடுப்பகுதியில் உள்ள ஓவியங்கள்**

மகாமண்டபத்தின் விதானப் பகுதியில் 'நவராத்திரி கதையினைச் சித்தரிக்கின்ற காட்சிகள் ஓவியமாகத் தீட்டப்பட்டுள்ளன. சும்பன், நிசும்பன் ஆகிய இரண்டு அசுரர்களையும் அழிப்பதற்காக தேவி சிங்க வாகனத்தில் அமர்ந்து பல்வகையான ஆயுதங்களைக் கையில் ஏந்தி அசுரர்களை அழிக்கின்ற கோலத்தில் அன்னை ஓவியமாகத் தீட்டப்பட்டிருக்கின்றாள். மகிடாசுரனை அழிப்பதற்காக தேவிக்கு பர்வதன், சூரியன், சந்திரன், அக்கினி, தேவேந்திரன், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோர் அன்னைக்கு பல்வகைப் படைக் கருவிகளை அளிக்கின்ற காட்சி தீட்டப்பட்டுள்ளது. மகிடாசுரனை அழிப்பதற்கு போர்க்கோலம் பூண்டு வருகின்ற அன்னையின் காட்சியைக் கண்ட மகிடாசுரன், விடாகன் என்ற மந்திரியை சண்டைக்கு அனுப்புகிறான் தேவியுடன் சண்டைப் போட்டு விடாகன் மரணமடைந்த காட்சியும், பின்னர் மகிடாசுரன் தேவியுடன் சண்டை போடுகின்ற காட்சியும், மகிடாசுரனை தேவி தன்னுடைய சூலத்தினால் கிழிக்கின்ற காட்சியும், பின்னர் மகிடாசுரன் யானையாக வந்து தேவியுடன் போரிடுகின்ற காட்சியும் பின்னர் சிங்க உருவமாக வந்து அன்னையிடம் போரிடுகின்ற காட்சியும், சிங்கமாக வந்த மகிடாசுரன் தேவியினால் பலியாகின்ற காட்சியும், மகிடாசுரன் இறந்த செய்தி கேட்டு மற்ற தெய்வங்களெல்லாம் தேவியை வணங்குகின்ற காட்சியும் இங்கு ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது.

சும்பன் நிசும்பன் என்ற இரண்டு அரக்கர்கள் ஆட்சி செய்து வந்தார்கள். இவர்கள் வனத்தில் இருந்த போது தேவியைக்

கண்டனர், சும்பன் தேவியைத் தான் திருமணம் செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணத்தின் காரணமாக நிசும்பனை தூது அனுப்புகின்றான். நிசும்பனிடம் தேவி, உங்கள் இருவரில் யார் வெற்றி பெறுகின்றீர்களோ, அவரைத் திருமணம் செய்து கொள்கிறேன் என்று கூறினாள். அப்போது சும்பன் கோபம் கொண்டு துரம்பாயோசன் என்பவனைச் சண்டைக்கு அனுப்பு கிறான். சண்டைக்கு வந்த துரம்பாயோசனை அன்னை பார்வை யாலேயே எரித்து விட்டாள். சும்பன், நிசும்பன் ஆகியவர்களுடன் சண்டன் முண்டன் ஆகியவர்கள் சண்டையிடுகின்ற காட்சியும், காளி இவர்களை வெற்றி கொள்ளுகின்ற காட்சியும், இரத்தபீசன் இறந்த காட்சியும், கடைசியில் சும்பன் நிசும்பன் ஆகிய இருவரையும் அன்னை வெற்றி கொள்ளுகின்ற காட்சியும் இதனால் அன்னையின் மீது அருகில் இருந்த தெய்வங்கள் அனைவரும் பூமாரி பொழிகின்ற காட்சியும் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது.

## அம்மன் சன்னதி-பள்ளியறை மண்டபம் (கிழக்குப் பக்கம்)

மிருகண்ட மகரிஷி யாகம் செய்கின்ற காட்சியும் அவருக்குக் குழந்தை பிறந்து, பிள்ளையினை தானம் கொடுக்கும் காட்சியும், பிள்ளையினை பள்ளிக்கு அனுப்புகின்ற காட்சியும், கர்ப்பம் தரித்த பெண் ஒருத்தி அமர்ந்த நிலையில் பிறந்த குழந்தைக்குப் பால் கொடுக்கின்ற காட்சியும் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது, மார்க்கண்டேயன் சிவனுக்கு பூஜை செய்வதற்கு மலர் எடுக்கும் பொழுது எமன் வந்து பிடிக்கின்ற காட்சியும், மார்க்கண்டேயனை எமன் பாசத்தினால் கட்டியிழுக்கின்ற காட்சியும், சிவபெருமானுக்கு கோபம் வந்து எமனைக் குத்துகின்ற காட்சியும், பின்னர் சிவன் எமனை எழுப்புகின்ற காட்சியும் கைலாசத்திலே சிவனும் பார்வதியும் இருக்கும்பொழுது சிவனை வெற்றி பெறுவதற்கு அம்மனுக்கு பூசை செய்கின்ற காட்சியும், சந்தன மரத்தில் ஒளிந்துகொண்ட அரக்கனை சிவபிரான் நெற்றிக்கண்ணால் எரித்த காட்சியும், பிறகு இறைவன் பார்வதியிடம் வரும்பொழுது கதவு சாத்தியிருப்பதைக் கண்டு, சுந்தரமூர்த்தியை அனுப்பி பார்வதியை சமாதானம் செய்கின்ற காட்சியும் ஓவியமாகத் தீட்டப் பெற்றுள்ளது.

## அம்மன் கோயில்-பள்ளியறை மண்டபம் (மேற்குப் பக்கம்)

தட்சன் யாகம் செய்யும்பொழுது சிவபெருமானுக்கு உரிய அவிர் பாகம் கொடுக்காமல், மகள் தாட்சாயிணியையும் அழைக்காமல் யாகம் செய்தான். தண்டம் அளிக்காத யாகம் தகாது அழிய வேண்டும் என்று அசுரன் யாகத்தை அழிக்கும் காட்சியும், விக்கின சூரன் யாகத்தை அழிக்கச் செல்லும் காட்சியும், தட்சன் யாகத்தில் மகாவிஷ்ணு, தேவேந்திரன், சூரியன், சந்திரன், அக்கினி, ரேவதி சகலமான தேவதைகளும் இருக்கின்ற காட்சியும், பின்னர் அகோரவீரபத்திரர் கோபத்துடன் வந்து தட்சன் தலையை வெட்டுகின்ற காட்சியும் ஓவியமாகத் தீட்டப்பெற்றுள்ளது.

## சுதை உருவங்கள்

மராட்டியர் காலத்தில் அழகு வாய்ந்த சுதை உருவங்கள் செய்யப் பெற்றன. இதற்கு எடுத்துக்காட்டாக தஞ்சைப் பெருவுடையார் கோயிலில் உள்ள, அம்மன் சன்னதியின் பள்ளியறை மண்டபத்தில் உள்ள சுதை உருவங்கள் விளங்குகின்றன.

மணலால் பிடிக்கப்பெற்ற இலிங்கத்தை பார்வதி வணங்கும் பொழுது, அதை காவிரி நீர் அடித்துச் செல்லாமலிருக்க இலிங்கத்தை இரு கைகளாலும் தழுவிக்கொள்ளும் காட்சியும், சிவராத்திரி மகிமைக் காட்சியான காட்டில் புலிக்கு பயந்த வேடன் மரத்தின் மேல் ஏறிக் கொண்டு தான் இரவு முழுவதும் தூங்காமல் இருக்க வில்வமரத்தின் ஒவ்வொரு இலையாகப் பறித்துக் கீழே போட, அவ்விலைகள் கீழே இருந்த இலிங்கத்தின் மீது விழுகின்ற காட்சியும், பார்வதி சிவபூஜை செய்கின்ற காட்சியும், மார்க்கண்டேயன் எமனின் வலையில் இருந்து மீள சிவபெருமானைக் கட்டிக் கொள்ளுகின்ற காட்சியும் சுதையாக வடிக்கப் பெற்றுள்ளன.

## திருச்சுற்றாலை வினாயகர்

அம்மன் சன்னதியிலிருந்து வலம் வருகின்ற பாதையில் அதாவது திருச்சுற்றாக மேற்குப் பக்கம் சென்றால் வராகி மண்டபமும், அதனை அடுத்துச் சென்றால் வினாயகர் சன்னதியும் உள்ளன. இவை

முதலில் மாமன்னன் இராசராசனால் எடுக்கப்பெற்றன. இதில் இருந்த வினாயகர் சேதம் அடைந்துவிட்டதால், இதை எடுத்துச் திருச்சுற்று மாளிகையில் வைத்து விட்டு அவ்விடத்தில் இப்பொழுது இருக்கின்ற வினாயகர் சிற்பத்தை மராட்டிய மன்னன் இரண்டாம் சரபோஜியின் காலத்தில் வைத்துள்ளனர்.

வினாயகர் சன்னதியின் அடிப்பகுதியில் தஞ்சை மராட்டிய வம்சத்தினை விளக்குகின்ற போன்சலே வம்ச சரித்திரம் மராட்டிய மொழியில் கல்வெட்டாக பொறிக்கப்பட்டுள்ளது. இதனை அடுத்துச் சென்றால் திருச்சுற்று மாளிகையின் மேற்குப் பக்கத்தை அடையலாம். அங்கு வரிசையாக இலிங்கங்கள் வைக்கப்பட்டுள்ளன. இதேபோன்று வடக்குப் பக்கத்திலும் வைக்கப்பெற்றுள்ளன. திருச்சுற்று மாளிகையின் மேற்கு, வடக்குச் சுவர்களில் திருவிளையாடல் புராணக் காட்சிகள் ஓவியங்களாகத் தீட்டப்பெற்றுள்ளன. இவ்வோவியங்கள் பிற்கால மராட்டியர் காலத்தில் தீட்டப்பெற்றவையாகும். அநேகமாக கடைசி தஞ்சை மராட்டிய மன்னனான சிவாஜி மகாராஜா காலத்தில் தீட்டப்பெற்றிருக்க வேண்டும்.

திருச்சுற்றின் வடமேற்கு மூலையில் உள்ள கருவூரார் சன்னதியும் சிவாஜி மகாராஜாவால் எடுக்கப்பெற்றதாகும். கருவூரார் சன்ன திக்கு அருகில் உள்ள முருகன் சன்னதி நாயக்க மன்னர்களால் எடுக்கப்பெற்றதாகும்.

## இராஜா மண்டபம்

இதற்கு எதிரில் உள்ள மண்டபம், நாயக்கர் காலத்தில் எடுக்கப்பெற்றதாகும். இம்மண்டபம் மராட்டியர் காலத்தில் இராஜா மண்டபம் என்று அழைக்கப்பெற்றது. ஏற்கனவே இருந்த மண்டபத் தூண்களை ஒன்று சேர்த்து வட, தென்பக்கங்களில் செங்கற்களால் சுவர் எழுப்பி உள்ளனர். இந்த சுவர்களின் உள்பக்கத்தில் சுதை பூசி அதன் மீது ஓவியங்கள் தீட்டி உள்ளனர். இந்த மண்டபத்தில் மராட்டிய மன்னர்கள் ஓய்வு எடுப்பது வழக்கமாம். எனவே இது இராஜா மண்டபம் என்று அழைக்கப்பெற்றதாம்.

## இராஜா மண்டப ஓவியங்கள்

இந்த மண்டபத்தின் தெற்கு மற்றும் வடக்குச் சுவர்களில் மராட்டிய மன்னர்கள் மற்றும் அவர்களுடைய மனைவியர்களின் உருவங்களும் ஓவியங்களாகத் தீட்டப்பெற்றுள்ளன.

## தென்பக்கச் சுவர் ஓவியங்கள்

1. சுஜான் பாயி
2. பிரதாபசிங்கு மகாராஜா
3. துளஜா மகாராஜா
4. செறபோஜி மகாராஜா
5. சிவாஜி மகாராஜா

## வடக்குப் பக்கச் சுவர் ஓவியங்கள்

1. சைதம்பா பாயி சாளப்பு
2. ஆதி சிவாஜி மகாராஜா
3. ஏகோஜி மகாராஜா
4. ஷாஜி மகாராஜா
5. ஆதி சரபோஜி மகாராஜா
6. துக்கோஜி மகாராஜா
7. பாவா சாயெப்பு மகாராஜா

இவர்களோடு நாட்டியப் பெண்ணும், இரண்டு காவலர்களும் ஓவியமாக தீட்டப் பெற்றுள்ளனர்.

## மேற்குச் சுவர்

1. ஸரபோஜி மகாராஜா (தத்து எடுக்கப்பட்டவர்)
2. சிவாஜி மகாராஜா

## இராஜா மண்டபத்தில் உள்ள தூண் சிற்பங்கள் (நாயக்கர் காலம்)

1. ஊர்த்தவ தாண்டவம்
2. கண்ணன் வெண்ணை தின்னும் காட்சி
3. கணபதி
4. நாட்டியப்பெண்
5. கொடிப்பெண்
6. பிச்சாடனர்
7. சிம்மங்கள்
8. குரங்கு

## வாகனங்கள் (மராட்டியர் காலம்)

1. ஆட்டுக்கடா
2. பூதவாகனம்
3. மயில்வாகனம்
4. சூரிய பிரபை
5. சந்திர பிரபை
6. யானை
7. குதிரை
8. சிம்மம்
9. மூஞ்சூரு

—

# திறல்நகர்க் கல்வெட்டு

**தே. கோபாலன்,** எம். ஏ.

தொல்பொருள் அலுவலர், திருநெல்வேலி

## அமைவிடம்

மதுரை மாவட்டம் திருமங்கலம் வட்டத்தில் பச்சக்கோபன்பட்டி என்ற ஊர் உள்ளது. இவ்வூருக்கு அருகிலுள்ள புஞ்சை நிலங்களின் ஓரத்தில் கருடக்கம்பம் மட்டும் உள்ள ஒரு பெருமாள் கோயில் உள்ளது.[1] அக்கருடக்கம்பத்தின்பீடமாகக் கட்டப்பட்டுள்ள கற்களில் ஒன்றில் தான் இவ்வரிய கல்வெட்டு காணப்படுகிறது. நீள வாக்கில் கல்வெட்டு வெட்டப்பட்டிருக்க, இக்கல்வெட்டு பக்க வாட்டில் பீடத்தில் உள்ளதால் வேறு இடத்திலிருந்து இடம் பெயர்ந்து வந்துள்ளது உறுதியாகிறது. கல்லின் மேல், கீழ்ப் பகுதிகள் செதுக்கப்பட்டு விட்டதால் கல்வெட்டு முழுவதுமில்லை. எனினும் பொறிக்கப்பட்டுள்ள செய்தி சிறந்ததொன்றாகும்.

## கல்வெட்டு

1. காண்டாயிர
2. த்தொரு நூற்றா
3. றேழ் செந்தமி
4. ழ் தேர் சுந்தர ப
5. ாண்டியற் காண்
6. டு நான்கப்[2] பெரு
7. மன்னன் திருத் தா
8. யார் வீரசோழி
9. யாள்வார் பே
10. ரினாற் றிறனகர்க்
11. கே பிறங்க அற
12. ஞ் செய்தான் கரு
13. முந்நீர் நலனேத்
14. துந் திருநல்லூர்
15. தீபன் கௌசிக
16. ன் கங்கையார
17. நி கருமாணிக்கா
18. ள் வானுரு நண்ணூ
19. ......................

### கல்வெட்டின் காலம்

இக்கல்வெட்டு முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் (கி.பி. 1216-1244) நான்காவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டுள்ளது. சக ஆண்டு 1142-இல் வெட்டப்பட்டுள்ளது. இதில் 42 என்பது ஆறேழ் என்று குறிப்பிடப்பட்டிருப்பது, கம்ப இராமாயணத்தில் குறிப்பிடப்படும் ஏழிரண்டு ஆண்டுகள் இராமன் காட்டிற்குச் செல்ல வேண்டும் என்ற சொற்றொடரை நினைவூட்டு கிறது. சகம் 1142-க்கு இணையான கிறித்துவாப்தம் கி.பி. 1220. இது சுந்தரபாண்டியனின் 4-ஆவது ஆட்சியாண்டு எனக் குறிப்பிடப் படுவதால் இவன் கி.பி. 1216-இல் ஆட்சிக்கு வந்தான் என்பது தெளிவாகிறது. கி.பி. 1216-இல் ஆட்சிக்கு வந்த சுந்தரபாண்டியன் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆவான். இவனுக்கு "சோணாடு கொண்ட", "சோணாடு வழங்கிய" என்ற விருதுப் பெயர்கள் பல கல்வெட்டுக்களிலும் காணப்படுகின்றன. இவனது ஆட்சி கி.பி. 1244 வரை இருந்தது.

திருத்தங்கல் (சிவகாசிக்கு அருகில் உள்ள ஊர்) கல்வெட்டு சகம் 1149-ஐக் குறிப்பிட்டு 12-ஆவது ஆட்சியாண்டினைக் குறிப்பிடு கிறது. (கி.பி. 1227-12-1215). இது ஒன்றே இதுவரை இம்மன்னனது ஆட்சித் தொடக்கத்தைக் கண்டுபிடிக்கக் கிடைத்த கல்வெட்டாகத் தெரிகிறது. இக்கணிப்பை உறுதிப்படுத்தக் கிடைத்த இரண்டாவது கல்வெட்டாக இப்பசச்கோபன்பட்டிக் கல்வெட்டைக் கூறலாம்.

### பெருமன்னன்

இக்கல்வெட்டில் சுந்தரபாண்டியன் "பெருமன்னன்" என்று குறிப்பிடப்படுகின்றான். பெருமன்னன் என்ற சிறப்பு இவனுக்கு மிகப் பொருந்துவதாகும். இவனது வலிமையால் சோழர் ஆட்சி ஆட்டம் கண்டது. சோழ நாட்டைக் கைப்பற்றி முடிகொண்ட சோழ புரத்தில் வீராபிஷேகமும், விஜயாபிஷேகமும் செய்து கொண்டவன். சோழ மன்னன் மூன்றாம் ராசராசன் இவனைத் தலைவனாக ஏற்றுக் கொண்டு தன் மகனுக்கு இவனது பெயரிட்டுள்ளான். மகனுடன் வந்து இவன் காலடியில் வீழ்ந்து வணங்கி இழந்த சோழநாட்டைத்

திரும்பப் பெற்றுக் கொண்டுள்ளான். இச்சுந்தரபாண்டியனது கல்வெட்டுக்கள் தமிழகத்தின் எல்லாப் பகுதிகளிலும் காணக் கிடைப்பதாலும், இவனது விரிந்த ஆட்சிப்பரப்பாலும் இவனுக்கு பெருமன்னன் என்ற பெயர் வழக்கு பொருத்தமாக அமைந் துள்ளது.

## தமிழார்வம்

இக்கல்வெட்டில் சுந்தரபாண்டியன் செந்தமிழில் தேர்ந்தவன் என்று குறிக்கப்படுகின்றான். "செந்தமிழ் தேர் சுந்தரபாண்டியன் என்று இக்கல்வெட்டு குறிப்பது போலவே இவனது மெய்க்கீர்த்திகள் "மூவகைத் தமிழும் முறைமையின் விளங்க", "சுருதியுந் தமிழுந் தொல்விளக்குலவ"[3] என்ற சொற்றொடர்கள் உணர்த்துகின்றன. இவன் சோழநாட்டில் மாடமாளிகை கூடகோபுரங்கள் அனைத் தையும் இடித்துத் தீயிட்டு அழித்த போதுகூட பட்டினப்பாலை பாடிய கண்ணனாருக்கு விட்ட மண்டபத்தை இடிக்கவில்லை என் திருவெள்ளறைக் கல்வெட்டு குறிப்பிட்டு இவனது தமிழார்வத்தை வெளிப்படுத்துகின்றது.

## திருத்தாயார் வீரசோழியாள்வார்

இம்மன்னனது தாயின் பெயர் இக்கல்வெட்டில் "பெருமன்னன் திருத்தாயார் வீரசோழியாள்வார்" என்று காணப்படுகின்றது. இதுவரை இவனது தாயாரின் பெயர் தமிழக வரலாறு அறிந்ததாகத் தெரியவில்லை. இதுவே இச்செய்தியைக் குறிக்கும் முதல் கல்வெட் டாக இருக்கலாம். இவனது பெயர் "வீரசோழியாள்வார்" என்பதும் சிந்திக்கத்தக்கதொன்றாகும்.

இம்மாறவர்மன் சுந்தரபாண்டியனுக்கு முன்னால் இருந்த இடைக்காலப் பாண்டியர்கள் சோழர் ஆதிக்கத்துக்குக் கட்டுபட்ட வர்களாகவும், நண்பர்களாகவும் இருந்திருக்கின்றார்கள். அதன் விளைவாக பாண்டிய சோழ மண உறவு நிகழ்ந்திருக்கின்றது. இதனை நோக்கின் "வீரசோழியாள்வார்" சோழர் குலப் பெண் ணாக இருக்க வாய்ப்புள்ளது. பெயரும் அதை வெளிப்படுத்துவ தாக உள்ளது. வீரசோழன் என்ற பெயர் சோழ மன்னர்களில் முதல் இராசேந்திர சோழனின் மகன்களுக்கு உண்டு.

வீரராசேந்திரனுக்கு வீரசோழன் என்ற பெயருமுண்டு. இவன் பெயராலேயே "வீரசோழியம்" இயற்றப்பட்டது. இவனது தம்பியரில் ஒருவனுக்கும் வீரசோழன் என்ற பெயருண்டு என்பதை இரண்டாம் இராசேந்திரனின் மெய்க்கீர்த்தி, "தொடுகழல் வீரசோழனை தொல்புகழ்க் கரிகால சோழ"[4] னென்ற பெயருடன் உறையூர் பகுதிக்குத் (கோழி உறையூர்) தலைவனாக அமர்த்தியதைக் குறிப்பிடுகிறது.

"வீரசோழன்" என்ற பெயர் கொங்கு சோழர்களுக்கும் உண்டு. கொங்கு சோழர்களில் ராசாதிராச வீரசோழன் என்பவன் கி.பி. 1117 முதல் 1135 முடிய ஆட்சி புரிந்துள்ளான். மற்றுமொரு வீரசோழன் கி. பி. 1183 முதல் கி. பி. 1205 வரை ஆட்சிபுரிந்துள்ளான்.[5] இரண்டாவதாகக் குறிக்கப்படும் வீரசோழனின் அத்தை ஒருத்தி மாறவர்மன் ஸ்ரீவல்லபனுக்கு மணம் முடிக்கப்பட்டதாக வரலாற்றுச் செய்திகள் உண்டு. மாறவர்மன் ஸ்ரீவல்லபன் கொங்கு சோழ இளவரசி திருமணத் தொடர்பு சுமார் கி.பி. 12-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தது.[6] இதேபோல கொங்கு சோழருக்கும் பிற்காலப் பாண்டியருக்குமான மணத்தொடர்பு மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி.1237-இல் ஆட்சிக்கு வந்தவன்) காலத்திலும் இருந்துள்ளது.[7] இக்கல்வெட்டில் குறிக்கப்படும் பாண்டியனின் தாய் வீரசோழியாள்வார் ஏற்கனவே குறிப்பிட்டது போல் சோழப் பேரரசு வழி வந்தவரா அல்லது கொங்கு சோழர் வழி வந்தவரா என்பது இனிவரும் ஆய்வுகளால் தெளிவுறும்.

வீரசோழியாள்வார் சோழர் குலத்தவர் என்பதால் இக் கல்வெட்டில் ஒரு மறைமுக மரியாதை செலுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இச்சுந்தரபாண்டியனது கல்வெட்டுக்கள் இவனது மூன்றாவது ஆண்டு முதல் "சோணாடு கொண்ட" என்ற விருதுப் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு அவ்விருதுப் பெய ரில்லாது பெருமன்னன் செந்தமிழில் தேர்ந்தவன் என்ற சிறப்பு களைச் சொல்லி அவனது சோழர் குலத்தாய்க்கு ஒரு மரியாதை செலுத்துகின்றானோ என்று எண்ணத் தோன்றுகின்றது. மேலும்

இவ்வூரில் இன்றுள்ள அம்மாட்சியர் கோயில், அருகிலுள்ள அம்மாப் பட்டி ஆகிய பெயர்கள் இத்தாயை நினைவுறுத்துவதாகத் தோன்று கிறது.

## திறல்நகர்

இக்கல்வெட்டு உள்ள இடத்தை ஒட்டி திரளி ஆறு என்ற ஒரு சிற்றாறு ஓடுகிறது. அதனை அடுத்து திரளி என்ற ஊர் உள்ளது. இவ்வூரே இக்கல்வெட்டில் பத்தாவது வரியில் குறிக்கப்படும் "திறனகர்" ஆகும். திரளியில் காமாட்சியம்மன் கோயிலில் பல துண்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. இக்கல்வெட்டுக்கள் "திருமுற்றத்து ஆழ்வார் கோயில் ஸ்ரீவைஷ்ணவர்", "திருமுற்றத்து ஆழ்வார்" எனக் குறிப்பதன் மூலம் ஒரு பெருமாள் கோயில் இருந்து சிதைந்து அக்கோயில் கற்கள் பிற இடங்களுக்குப் பெயர்ந்ததை அறிய முடிகிறது. அப்படி இடம் பெயர்ந்ததே இந்த சுந்தர பாண்டியனது கல்வெட்டு. அருகில் உள்ள பச்சக்கோபன் பட்டிக்கு வந்திருக்கக்கூடும்.

## திருநல்லூர் கௌசிகன்

திருநல்லூர் தீபன் கௌசிகன் என்று கல்வெட்டில் குறிக்கப்படும் கருமாணிக்காள்வான் சுந்தரபாண்டியனது தாயின் பெயரால் திறல் நகரில் அந்நகரே சிறப்புறும் வண்ணம் பல அறங்கள் செய்துள்ளான். இவனது ஊர் திருநல்லூர். இவ்வூர் "கருமுந்நீர் நலனேந்தும் திருநல்லூர்" எனக் குறிக்கப்படுகிறது. முந்நீர், கடல் நீரைக் குறிக்கும். எனவே திருநல்லூர் என்பது கடலை ஒட்டிய ஊர் என்று கருதலாம். கொற்கைப் பகுதியில் ஒரு நல்லூர் இருந்தமை இரண் டாம் வரகுணனின் திருச்செந்தூர்க் கல்வெட்டால் தெரியவருகின்றது[8] கொற்கைக் கிழான் நற்கொற்றனுக்கு (சோழவந்தான் பகுதியில்) பாகனூர் கூற்றத்தில் தானங்கள் வழங்கப்பட்டமை வேள்விக்குடிச் செப்பேட்டால் அறியக் கிடக்கிறது. அக்கொற்கைக் கிழானுக்கு இப்பகுதியில் சிறப்பிருந்ததும் எண்ணத் தக்கதாகும். இவ்வறம் செய்தவனின் பெயர் கருமாணிக்காழ்வான் என்பதை இன்று இப் பகுதியில் உள்ள திருமாணிக்கம் என்ற ஊர் உணர்த்திக் கொண்டிருக்கிறது.

இன்றைய திரலியில் அம்மாட்சியார் கோயில், ஐயனார் கோயில், கம்பப்பெருமாள் கோயில், கண்ணிமார் கோயில், சீனிவாசப் பெருமாள் கோயில், காமாட்சியம்மன் கோயில் ஆகியவை உள்ளன. காமாட்சியம்மன் கோயில் ஒரு பெரிய கண்மாய்க்கரையை ஒட்டி அமைந்துள்ளது. இப்பகுதியின்கண்ணுள்ள வயல் ஒன்றின் நடுவில் காணப்படும் மேடு கொட்டாரமேடு (அய்யன் கொட்டாரம்) என்ற பெயரில் உள்ளது. தானியங்கள் சேகரித்து வைக்கும் கொட்டாரம் பண்டு இருந்ததை இது உணர்த்திக் கொண்டுள்ளது.

## முடிவுரை

கல்வெட்டின் இறுதிப்பகுதி உடைந்து விட்டதால் எதன் பொருட்டு இக்கல்வெட்டு பொறிக்கப்பட்டது என்பது அறிய இயல வில்லை. எனினும் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் ஆட்சி ஆண்டோடு இணைத்து சக ஆண்டைக் குறிப்பதாலும் அவனது தாயின் பெயரைக் குறிப்பதாலும், நல்ல இலக்கியச் சொல் நடையில் கல்வெட்டு வாசகம் இருப்பதாலும், இக்கல்வெட்டுள்ள இடத்தைச் சூழ்ந்த இடங்களின் பெயர்கள் தொன்மைச் செய்திகளை உணர்த்திக் கொண்டிருப்பதாலும் இக்கல்வெட்டு ஒரு சிறப்பான கல்வெட்டு என்பதில் ஐயமில்லை.

அடிக்குறிப்புகள்

1 இக்கம்பத்தையொட்டி கட்டைக்குளம் திரு. ஒ. ஜெயச்சந்திரன் என்பவரால் ஒரு பெருமாள் கோயில் எடுப்பிக்கும் முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

2 நான்காகப்

3 மெய்க்கீர்த்திகள் (உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவன வெளியீடு) பூ. சுப்பிரமணியம், பக்கம் - 240. வரி. 4. & பக்கம். 238. வரி. 11

4 மெய்க்கீர்த்திகள் - உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவன வெளியீடு பூ. சுப்பிரமணியம், பக்கம் 58, வரி-10

5 Historical sketches of Ancient Deckhan vol. II K.V. Subramaniya Aiyar

6 Ibid. Page: 102

7 Ibid

8 S.I.I. Vol. XIV, No. 16-A, Page-13

---

# பார்த்திவசேகரபுரம்

**மா. செந்தில்செல்வக்குமரன்**

தொல்பொருள் அலுவலர்

பார்த்திவசேகரபுரம், நாகர்கோவிலில் இருந்து 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. தொடுவெட்டி சென்று நகரப் பேருந்தில் இவ்வூருக்குச் செல்லலாம். அல்லது புதுக்கடை என்ற ஊரில் இறங்கி நடந்து செல்ல வேண்டும்.

இஃது அழகிய இயற்கைச் சூழலில் அமைந்த சிற்றூராகும். இன்றைக்கு இங்கு ஏறத்தாழ 300 வீடுகள் உள்ளன. மலைப் பாங்கான இடமாகும்.

## செப்பேடு

இவ்வூர் பற்றிய பழமையான குறிப்பினைக் கருநந்தடக்கனின் பார்த்திவபுரம் செப்பேட்டில் காணமுடிகிறது. அச் செப்பேட்டில் இவ்வூர் பார்த்திவசேகரபுரம் என்று குறிப்பிடப்படுகிறது. ஆனால் இன்று பார்த்திவபுரம் என்று அழைக்கப்படுகிறது. கருநந்தடக்கனின் செப்பேட்டில் அம்மன்னன் இவ்வூரில் கி.பி. 864-இல் விஷ்ணுவுக்கு ஒரு கோயில் எழுப்புவித்தான் என்றும், சாலை ஒன்றினை நிறுவினான் என்றும் குறிப்பிடப்படுகிறது. அச்சாலையில் மாணவர்கள் தங்கிப் படிப்பதற்கு வசதிகள் செய்து தரப்பட்டதாகவும் அச்செப்பேடு சுட்டுகிறது. அச்சாலைக்குரிய செலவிற்காகப் பல ஊர்களில் உள்ள நிலங்கள் தானமாக வழங்கப்பட்டுள்ளன. கருநந்தடக்கனால் எழுப்பப்பட்டதாகக் கூறப்படும் விஷ்ணு கோயில் பல மாற்றங் களுக்குப் பின் இன்றும் இவ்வூரில் உயரிய தோற்றத்துடன் காட்சி அளிக்கிறது.

## விஷ்ணுகோயில்

தற்பொழுது இவ்வூரின் பழமையினை எடுத்துக்காட்டும் வகை யில் விஷ்ணுகோயில் காணப்படுகிறது.

இக்கோயில் மேற்கு நோக்கி அமைந்துள்ளது. இரண்டு திருச் சுற்றுக்களைக் கொண்டு விளங்குகின்றது. கருவறை அந்தராளம், முன்மண்டபம், தூண் மண்டபம் என்ற அமைப்பினைக் கொண்டு விளங்குகிறது. அடிப்பகுதி (அதிட்டானம்) முதல் கூரைப் (பிரஸ்தரம்) பகுதி வரை கருங்கற்கள் கொண்டு உருவாக்கப் பட்டுள்ளது. கூரைப்பகுதிக்கு மேல் உள்ள பகுதி செங்கற்களும் சுதையும் கொண்டு உருவாக்கப்பட்டு காட்சியளிக்கிறது.

அதிட்டானப் பகுதி, உபானம், ஜெகதி, முப்பட்டைக்குமுதம், பலகை, வேதிகை ஆகிய அங்கங்களைக் கொண்டு அமைக்கப் பட்டுள்ளது.

சுவர்ப் பகுதியில் அரைத்தூண் அலங்காரம் காணப்படுகிறது. ஆனால் கோட்டங்கள் இல்லை.

விமானம் மூன்று தளங்களைக் கொண்டு விளங்குகிறது. இதன் அமைப்பு வேசர வடிவில் உருவாக்கப்பட்டுள்ளது. விமானக் கீரிவக் கோட்டங்களில் இந்திரன், தட்சிணாமூர்த்தி, நரசிம்மர், பிரம்மா ஆகியோருடைய சுதை உருவங்கள் இடம் பெற்றுள்ளன.

கருவறையில் பெருமாளின் திருவுருவச்சிலை காணப்படுகிறது. அவர் சங்கு, சக்கரம் ஏந்திய கையராய் நின்ற கோலத்தில் காட்சி தருகிறார். முதல் திருச்சுற்றில் பரிவார தெய்வங்கள் எதுவுமில்லை.

## பரிவார தெய்வங்கள்

இரண்டாவது திருச்சுற்றின் தெற்குப் பகுதியில் கிழக்கு நோக்கிய நிலையில் சிவன், கிருஷ்ணன் கோயில்கள் அமைந்துள்ளன. மேற்குப் பகுதியின் தெற்குப் பக்கத்தில் கிழக்கு நோக்கிய நிலையில் சாஸ்தா கோயில் காணப்படுகிறது. வடக்குப் பகுதியில் மேற்கு நோக்கிய நிலையில் வடக்கத்துப் பெருமாள், வராகப்பெருமாள் ஆகியோர் கோயில்கள் உள்ளன.

இக்கோயில்களுள் கிருஷ்ணன் கோயில் மட்டும் முழுவதும் கற்களால் உருவாக்கப்பட்டு அழகிய தோற்றத்துடன் காட்சி அளிக்கிறது. சதுர வடிவில் அழகிய கல்மேடை அமைக்கப்பட்டு

அதன் நடுவில் இக்கோயில் இடம் பெற்றுள்ளது. சதுர வடிவ மேடையின் சுவர்ப் பகுதியும் உரிய அங்கங்களுடன் வடிவமைக்கப் பட்டுள்ளது. அவ்வங்கங்களுள் ஒன்றாக அமைவது உத்திரவரியாகும். கிருஷ்ணன் கோயில் அதிட்டானம், உபானம், ஜெகதி, விருத்தக் குமுதம், யானையும் யாழியும் கலந்து அமைக்கப்பட்டவரி, வேதிகை ஆகிய அங்கங்களைக் கொண்டு விளங்குகிறது. சுவர்ப் பகுதியில் பொய்க் கோட்டங்கள் காணப்படுகின்றன. விமானம் சதுர வடிவில் அமைந்துள்ளது. விமானத்தின் ஸ்தூபி கருங்கல்லால் உருவாக்கப் பட்டுள்ளது.

கருவறை, அர்த்தமண்டபம் ஆகிய இரு அறைகளை மட்டும் இச்சிறு கோயில் கொண்டு விளங்குகின்றது. கருவறையில் இராஜ மன்னார் அழகிய தோற்றத்துடன் காட்சி தருகிறார். இக்கற்றிரு மேனி இரண்டு கரங்களுடன் வடிக்கப்பட்டுள்ளது. வலக்கரம் மடித்து வைத்த நிலையிலும் இடக்கரம் ஊர்வ ஹஸ்தமாகவும் உருவாக்கப்பெற்றுள்ளன. தலையினை மகுடம் அழகு செய்கிறது. வலக்காதினை மகரகுண்டலமும், இடக்காதினை பத்திர குண்டலமும் அணி செய்கின்றன. வலது மார்பில் ஸ்ரீவத்சம் காணப்படுகிறது. இடுப்பில் ஆடை உள்ளது. இத்திருமேனி மெருகேற்றப்பட்ட பளபளப்பான கருங்கல்லில் மிக அழகாக வடிக்கப்பட்டுள்ளது. இத் திருமேனி 10-ஆம் நூற்றாண்டுக் கலை அம்சத்துடன் உள்ளது. இப் பரிவாரக் கோயிலும் கட்டடக்கலை அமைப்பில் அக்காலத்தினைச் சார்ந்ததாக இருப்பதால், இக்கோயில் 10-ஆம் நூற்றாண்டில் உருவாக்கப் பெற்றிருக்க வேண்டும் எனலாம்.

எஞ்சியுள்ள பரிவார ஆலயங்களின் அடிப்பகுதி கருங்கற்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. மேற்பகுதி ஓடு வேய்ந்த நிலையில் கேரள கட்டடக்கலை அமைப்பினை பிரதிபலிக்கின்ற வகையில் அமைந்துள்ளது. இவற்றுள் வடக்குத்துப்பெருமாள் கோயில் கருவறையில் பெருமாள், மேலிருகரங்களில் சக்கரம், சங்கு ஏந்தியும், கீழ் வலக்கரத்தால் காக்கும் முத்திரை காட்டியும் கீழ் இடக் கரத்தை கதை மேல் வைத்த நிலையிலும் காணப்படுகிறார். இச் சிலை அமைதி 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகத் தெரிகிறது.

இரண்டாவது திருச்சுற்றின் மேற்குப் பகுதியில் கிழக்கு நோக்கி அமைந்துள்ள சாஸ்தா கோயிலில், தட்சிணாமூர்த்தி, நரசிம்மர், குபேரர் சிற்பங்கள் காணப்படுகின்றன. அம்மூன்று சிற்பங்களும் காலத்தால் பழமையானவை ஆகும்.

குபேரனது சிற்பம் அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. இதன் கலை அமைப்பு ஒன்பதாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தைச் சார்ந்ததாக உள்ளது.

தட்சிணாமூர்த்தி சிலை பழைய கோயிலின் விமானக் கிரீவக் கோட்டத்தில் இருந்ததாக இருத்தல் வேண்டும். இச்சிலை உட்குடி ஆசனத்தில் அமர்ந்த கோலத்தில் மிக அழகாக வடிக்கப்பட்டு காட்சி அளிக்கிறது. இதன் கலை அமைப்பு ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியைச் சார்ந்ததாக உள்ளது.

நரசிம்மர் யோக நிலையில் அமர்ந்த கோலத்தில் காணப்படுகிறார். இதனை யோக நரசிம்மர் எனக் குறிப்பிடலாம். இதுவும் கிட்டத்தட்ட அந்தக் காலத்தைச் சார்ந்தது எனக் குறிப்பிடலாம்.

## விஷ்ணு கோயிலின் காலம்

கருநந்தடக்கன் கட்டிய கோயில் தற்பொழுது இல்லை. விஷ்ணுக் கோயிலின் காலத்தைக் கணிப்பதற்கு ஏதுவாக கல்வெட்டு எதுவும் இல்லை. கருவறையில் உள்ள விஷ்ணுவின் சிற்பத்தையும் இக்கோயிலின் கட்டடக்கலை அமைப்பினையும் கொண்டு இக் கோயிலை 15-ஆம் நூற்றாண்டினைச் சார்ந்தது எனக் கூறலாம்.

## கல்வெட்டுக்கள்

இரண்டாவது திருச்சுற்று வாயிலில் உள்ள திண்ணையின் வட பகுதியில் தெற்கு நோக்கிய நிலையில் உள்ள சுவர்ப்பகுதியில் வட்டெழுத்துக் கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அக்கல்வெட்டு நல்ல நிலையில் உள்ளது. கல்வெட்டின் தொடக்கத்தில் உள்ள

இரண்டு வரிகள் கிரந்தத்திலும், பின்னர் உள்ள வரிகள் வட்டெழுத்திலும் உள்ளன. இக்கல்வெட்டு கோயிலுக்கு நொந்தா விளக்கு எரிப்பதற்காக நிலதானம் வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறது. இது கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது ஆகும்.

முதல் திருச்சுற்றுச் சுவரின் மேற்குப் புற அதிட்டானக் குமுதத்திலும் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் உள்ளன. இவை சுண்ணாம்புப் பூச்சில் மறைந்துள்ளன.

### தொல்பொருட்கள்

கோயில் வளாகத்தில் மிகுதியாகக் கூரை ஓடுகள் காணப்படுகின்றன. இவை நீள் சதுர வடிவத்தில் ஒரு பக்கத்தில் வளைவினைக் கொண்ட குறட்டு ஓடுகளாகும். இவை பழைய கோயிலின் கூரைப் பகுதிக்கு உரியனவாக இருக்கலாம்.

### பாடகச்சேரி

இவ்வூரின் கோயிலுக்கு வடக்குப்புறம் உள்ள குளத்தின் அருகில் உள்ள தோட்டப்பகுதி பாடகச்சேரி என்று அழைக்கப்படுகிறது. இவ்விடமே கருநந்தடக்கன் காலத்தில் பாடகசாலை அஃதாவது பாடசாலை அமைந்திருந்த இடமாக இருக்கலாம் என்று ஊர் மக்கள் கருதுகின்றனர். இப்பகுதியில் பழமையான கிணறு ஒன்று காணப்படுகிறது.

### மடம்

விஷ்ணு கோயிலின் பின்புறம், அஃதாவது கிழக்குப் பகுதியில் இரண்டாவது திருச்சுற்றினை ஒட்டிய பகுதியில் கருநந்தடக்கன் காலத்தில் (கி.பி. 864) மடம் இருந்ததாகக் கருதப்படுகிறது. இப் பகுதியில் நீள் சதுர வடிவில் பெரிய கற்கள் காணப்படுகின்றன. மேலும் சில கருங்கற்றூண்களும் காணப்படுகின்றன. நீள் சதுர வடிவில் உள்ள கற்கள் மடத்திற்குரிய தளக்கற்களாக இருத்தல் வேண்டும் எனக் கருதப்படுகிறது. இவ்விடத்தில் பழமையான

வட்ட வடிவக் கிணறு ஒன்றும் காணப்படுகிறது. அதன் சுவர்ப்பகுதி ஒழுங்குபடுத்தப்பட்ட செம்புரைக் கற்களால் (சிவப்பு கற்கள்) கட்டப்பட்டுள்ளது. மடம் இருந்த இந்தப் பகுதியில் பழமையான கூரை ஓடுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன.

ஒன்பதாம் நூற்றாண்டில் கருநந்தடக்கனால் உருவாக்கப்பட்டு பார்த்திவசேகரபுரம் எனப் பெயரிடப்பட்ட இவ்வூர் 1200 ஆண்டுகளுக்கு பின்பும் சிறிது பெயர் திரிபுடன் தனது பழம் வரலாற்றினை இழந்து விடாமல் இருப்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

———

# இராமநாதபுரம் மூலைக் கொத்தளம்

**ரா. நாராயணன்,**
*இளநிலைப் பொறியாளர்.*

பண்டைய மக்கள் தங்கள் ஊரைப் பகைவரிடமிருந்துக் காக்க அதைச் சுற்றிலும் வேலி எடுத்தனர். பத்துப்பாட்டு, எயினச் சாதியினர் அமைத்த அரண்களைப் பற்றிக் கூறுகையில் அவர்களது ஊர்கள் முள் வேலியால் சூழப்பட்டு அதைச் சூழ்ந்து காவற்காடுகள் இருப்பதாகக் கூறுகிறது. இதேப்போல குறுநில மன்னர்களும், மன்னர்களும் மலைகள் இயற்கையான பாதுகாப்பு அளிப்பதால், மலைகளின்மேல் கோட்டைகளை அமைத்தனர். அத்துடன் மலையையே மதிலாகக் கொண்டும், மலையில்லாதயிடத்து மதில் அரணமைத்தும் காப்பு அமைத்ததைப் பதிற்றுப்பத்து கூறுகிறது. இவ்வாறு எழுப்பப்பட்டமதில்களை "இலஞ்சி" என்றும், அரண்களை "எயில்" என்றும் நம் பண்டைய இலக்கியங்கள் கூறுகின்றன. கோட்டை மதில் சுவர்கள் பல பாகங்களைக் கொண்டதாக அமைக்கப் பட்டன. பிங்கலந்தை போன்ற பழைய நிகண்டுகள் அவற்றின் பெயர்களை நமக்குத் தெரிவிக்கின்றன.[1]

கி.பி. 1674 முதல் 1710 வரை ஆண்ட கிழவன் சேதுபதி 1720-ஆம் ஆண்டு மதுரையுடன்கொண்ட தொடர்பை அறுத்துக்கொண்டு தன்னாட்சியாக ஆளத் தொடங்கினார். தம் தலைநகரை போகலூரிலிருந்து இராமநாதபுரத்திற்கு மாற்றி அமைத்தார். மண் சுவர்களை இடித்துத் தள்ளி அவ்விடத்தில் இருபத்தேழடி உயரமும், ஐந்தடி அகலமும் உள்ள கோட்டையைச் செங்கற்களாலும், கருங்கற்களாலும் கட்டினார். இக்கோட்டை எவ்விதமான குண்டுகளும் துளைக்க முடியாதபடி கட்டப்பட்டது. இதன் நான்கு மூலைகளிலும் பெரிய கொத்தளங்களும், ஆங்காங்கு 32 சிறிய கொத்தளங்களும் கட்டப்பட்டன. இராமநாதபுரத்திலிருந்து சூரன்கோட்டை செல்லும் வழியில் ஊருக்கு வடமேற்கே

கோட்டை மேடு என்று ஒரு பகுதி இன்றும் அழைக்கப்படுகிறது. இப்போது உள்ள மூலைக்கொத்தளம் போன்ற அமைப்பு இந்த இடத்திலும் இருந்திருக்கவேண்டும். மேலும் அரண்மனையின் முன்பாகச் செல்லும் சாலையின் வலப்புறம் கோட்டைவாசல் பிள்ளையார் கோயில் என்ற ஒன்று உள்ளது. எனவே அரண்மனை யின் கிழக்குப்புறமாக மேற்படிக் கோட்டை சென்று இருந்தது என்றும் அக்கோட்டையின் வாசலில், இந்த கோட்டைவாசல் பிள்ளையார் கோயில் இருந்தது என்றும் கொள்ளலாம். மேலும் தற்போது உள்ள இராமநாதபுரம் வட்டக் காவல் நிலையத்திற்கு அருகே கோட்டையின் ஒரு பகுதி சில ஆண்டுகளுக்கு முன்னர் காணப்பட்டதாக பழைய குறிப்புகளிலிருந்து தெரிய வருகிறது. இவைகள் அனைத்தும் காலப்போக்கில் இடிந்து மறைந்து, தற்போது மதுரை - மண்டபம் செல்லும் நெடுஞ்சாலைக்கு அருகாமையில் ஒரே ஒரு பெரிய கொத்தளம் மட்டும் எஞ்சியுள்ளது. பொதுவாக கொத்தளங்கள் மன்னர்களது ஆட்சிக் காலங்களில் நாட்டைக் கண்காணிக்கவும், எதிரிகளின் நடமாட்டத்தைக் கண்காணிக்கவும் அமைக்கப்பட்டன.

## அமைப்பு

இக்கொத்தளம் தற்போது இராமநாதபுரம் வட்டம் புல எண் 7-இல் அமைந்துள்ளது. இதன் சுற்றுப்புற எல்லையாக வடக்கே ஊருணியும், தெற்கே மண்டபமும் மதுரை நெடுஞ் சாலையும், மேற்கே கழிவுநீர் தேங்கி நிற்கும் குட்டையும், கிழக்கே காலி மனையும் அமைந்துள்ளன. இக்கொத்தளத்தைப் பார்க்கும் பொழுது சமபக்க நாற்கோணத்தைப் போன்றும், சுவரின் ஓரங்கள் கூறிய முனைகளை உடையதாகவும் உள்ளது. இதன் மதில்கள் சாய்வாக அமைக்கப்பட்டு, தென்வடலாக 102 அடி நீளமும், கிழக்கு மேற்காக 102 அடி நீளமும் உள்ளதாக இருக்கிறது. கிழக்குப் பக்க மதில்சுவரில் நுழை வாயில் அமைக்கப்பட்டுள்ளது. இக்கொத் தளத்தின் தென்மேற்கு மூலையில் உள்ள அரணில் "கப்போலா" என அழைக்கப்படும் அமைப்பு உட்பக்கம் அறுகோணப்பட்டை

போன்று 50 செ.மீ நீளம் உள்ள ஆறு பட்டைகளை உடையதாகவும் அவற்றில் நின்று பார்க்க உதவும் தொலைநோக்கி போன்ற அமைப்பு 40 செ.மீ நீளமும், 15 செ.மீ. அகலமும் உடையதாகவும் அமைக்கப்பட்டுள்ளன. அக்காலத்திலேயே வளைவுச் சட்ட அடிப் படைத் தத்துவத்தில் இவ்வமைப்பு அமைக்கப்பட்டுள்ளது. இதனைப் பதிற்றுப்பத்து "குறுந்தாள் ஞாயில்" எனக் கூறுகிறது. அதாவது குறுகிய வாயிலை உடைய அரண் என்று பொருள். இம்மாதிரியான அமைப்பைத் தென்னிந்தியாவில் எங்கும் காணமுடியாது. மதிலின் மேல்பகுதியில் பீரங்கிகள் வைப்பதற்கு ஏதுவாக சுமார் 10 அடி நீளமும், ஐந்தரை அடி அகலமும், மூன்றடி உயரமும் உள்ள மேடை அமைக்கப்பட்டுள்ளது. கோட்டையின் அடிப்பாகத்தில் பீரங்கிக் குண்டுகள் வைப்பதற்கு அறைகள் உள்ளன. மேலும் இக்கொத்தளத்திலிருந்து ஒரு சுரங்கப்பாதை உத்தரகோசமங்கைக் கும், மற்றொன்று இராமலிங்கவிலாசத்திற்கும் செல்வதாகக் கூறப் படுகிறது. இதற்கான அமைப்பைக் கோட்டையின் நடுவில் அமைந் திருக்கும் இராமலிங்கவிலாசத்தில் இன்றும் காணலாம். இக்கொத் தளத்திற்குப் பாதுகாப்பாக ஆழமான அகழிகள் இருந்தமைக்கான சான்றுகள் தற்போதும் உள்ளன.

இக்கொத்தளத்தைக் கட்டுவதற்கு "சீதக்காதி மரைக்காயர்" அவர்கள் ஏராளமான பொன்னும் பொருளும் கொடுத்து உதவிய தாகவும், இதற்காக இக்கொத்தளத்தில் நடப்பட்டிருந்த கல் ஒன்றில் "சீதக்காதி" எனப் பொறிக்கப்பட்டிருந்ததாகவும் டாக்டர் எஸ். முகம்மது உசைன் நயினார் அவர்கள் எழுதிய "சீதக்காதி வள்ளல்" என்ற புத்தகம் தெரிவிக்கிறது. சரித்திர சான்றுகளின்படி வீரபாண்டிய கட்டபொம்மன் வெள்ளையர்களது தலைவரான ஜாக்சன் துரையைச் சந்தித்த இடம் இக்கொத்தளம் எனவும் அறியப்படுகிறது. ஆங்கிலேயர் காலத்தில் இக்கொத்தளத்தின் மேலே தளமட்ட அளவைக் கருவியை உபயோகப்படுத்தி அளவிடுதல் தொடர்பான விசிப்பலகையின் இலக்கு குறிக்கப்பட்டு தற்பொழுதும் வட்டாட்சியாளர் அவர்களின் கண்காணிப்பில் இருந்து வருவதாக அறியப்படுகிறது. இக்கொத்தளத்தின் மேலிருந்து தினமும் உத்தரகோசமங்கை கோபுரத்தை வழிபட்ட பிறகே

சேதுபதிகள் மற்ற பணிகளைச் செய்ததாக செவிவழிச் செய்திகள் கூறுகின்றன. இன்றைக்கும் இக்கொத்தளம் பாதுகாப்பாக இருக்க முனியசாமிக்கு வழிபாடு நடந்து வருகிறது. மேலும் இக்கொத்தளத்திற்கு அருகே கூரிச்சாத்தய்யனார் கோயில் ஒன்று காவல்தெய்வமாக உள்ளது. செல்லமுத்து விஜயரகுநாத சேதுபதி காலத்தில் பிரதானியாக இருந்த தாமோதரப் பிள்ளை அவர்களால் இராமநாதபுரம் கோட்டை பலப்படுத்தப்பட்டதோடு திருப்புல்லாணியிலும் மற்றொரு கோட்டை கட்டியுள்ளதாகச் செய்திகள் கிடைத்துள்ளன.

## மூலைக்கொத்தளத்தில் நடைபெற்ற போர்

கி.பி. *1763* முதல் *1765* வரை சேதுநாட்டை ஆட்சி செய்தவர் முத்துராமலிங்க சேதுபதி ஆவார். ஆர்க்காட்டு நவாப் முகம்மது அலியின் சார்பாக ஆங்கிலேயப் படைப்பிரிவைச் சார்ந்த கர்னல் ஜோசப் ஸ்மித் என்பவர் மறவர் நாட்டின் மீது படையெடுத்து வந்ததாக வரலாறு கூறுகிறது. இப்போரைப் பற்றிய நிகழ்ச்சிகள் மூலைக் கொத்தளத்தில் நடைபெற்றதாக சேது சமஸ்தானத்துப் பழைய குறிப்புகள் மூலம் தெரிய வருகிறது. வெள்ளையரை எதிர்த்த இச்சேதுபதி "ரிபல் முத்துராமலிங்க சேதுபதி" என்று இன்றும் மக்களால் அழைக்கப்படுகிறார்.

திருச்சியிலிருந்தும், பாளையங்கோட்டையிலிருந்தும் ஒரே சமயத்தில் ஆர்க்காட்டு நவாப்பின் சார்பாக முத்துராமலிங்க சேதுபதியைக் கைது செய்வதற்கு ஆங்கிலேயப்படை இராமநாத புரத்தைத் தாக்க வந்தது. பாளையங்கோட்டையிலிருந்து வந்த படை தற்போது எஞ்சியுள்ள மூலைக் கொத்தளத்தின் வெளிப்புற பகுதியில் முகாமிட்டிருந்தது. இப்படைப் பிரிவினரைச் சேதுபதி, கொல்லங்கொண்டான், நெற்கட்டும் சேவல் புலித்தேவன் வாண்டையார், பொன்முத்துராமலிங்கத் தேவரின் முன்னோர் ஆகிய மறவர்களின் உதவியோடு முறியடித்தார்.

வெள்ளையர் படைப்பிரிவினர் முழுமையாக மறவர்களால் மூலைக்கொத்தளத்தருகிலேயே கொல்லப்பட்டதாகவும் கூறப்படுகிறது. முத்துராமலிங்க சேதுபதி வெள்ளையர்க்கு எதிரான

இப்போரில் வெற்றி பெற்றதன் நினைவாக மங்களவிலாஸத்தில் வெற்றிவிழா எடுத்துக்கொண்டிருக்கும்பொழுது, திருச்சியிலிருந்து புறப்பட்ட வெள்ளையர் படை இராமநாதபுரத்திற்கு வந்து சேர்ந்தது. சிவகங்கை அரசர் கௌரி வல்லபத்தேவர் திருச்சியிலிருந்து வரும் படையைத் தடுத்துவிடுவார் என்ற நம்பிக்கைக்கு மாறாக வெள்ளையரின் படை சிவகங்கை அரசரையும் வென்று இராமநாதபுரம் வந்து சேர்ந்தது. இப்படை இராமநாதபுரத்திற்கு வடமேற்கே யுள்ள மூலைக்கொத்தளம் அருகே முகாமிட்டு அக்கோட்டையைத் தாக்கி அழிக்கவும் தொடங்கியது.

பிரதானி முத்துயிருளப்பப் பிள்ளையும் சேதுபதியின் சகோதரி மங்களேஸ்வரி நாச்சியாரும், நெருக்கடியை உணர்ந்து வெள்ளையர்ப் படையினரோடு சமாதானம் செய்துகொள்வது நல்லது என தூது அனுப்பினர். ஆனால் இச்சேதுபதி சினந்து ஒரு தங்கத் தாம்பாளத் தைத் தூக்கி எறிந்து சமாதானம் கூறியவர்களின் தலையை இத்தங்கத் தாம்பாளத்தில் வைத்து கொண்டுவா என்று ஆணையிட்டதாகச் சொல்லப்படுகிறது. சேதுபதியின் ஆணைக்குப் பயந்து பிரதானியும், மங்களேஸ்வரி நாச்சியாரும் சென்னைக்குத் தப்பியோடி வெள்ளைய ரிடம் சரண் அடைந்தனர். ஆங்கிலேயர்கள் வடமேற்கு மூலைக் கொத்தளத்தை முழுமையாகத் தாக்கியழித்து இராமநாதபுரத்திற்குள் நுழைந்தனர். தற்போது வெறும் மேடாகக் காட்சியளிக்கும் இப்பகுதி "கோட்டை மேடு" என அழைக்கப்படுகிறது. தப்பியோடிய முத்துராமலிங்க சேதுபதியும் அவரைச் சார்ந்தவர்களும் வண்ணான் குண்டுக்கருகில் உள்ள நாகநாத சத்திரத்திற்குள் ஒளிந்து கொண்டனர். ஆங்கிலப் படையின் கடுமையான முயற்சிக்குப் பிறகு சேதுபதி கைது செய்யப்பட்டு சென்னைக்குக் கொண்டு செல்லப்பட்டார். சேது சமஸ்தானத்தில் இருந்த பழைய ஆவணங்கள் மூலைக்கொத்தளத்தில் நடைபெற்ற போரினை விரிவாக எடுத்தியம்புகின்றன.

### பிற்காலத்தில் மூலைக்கொத்தளம்

கி.பி. *1862* முதல் *1873* வரை ஆட்சி புரிந்த முத்துராமலிங்க சேதுபதியின் சகோதரர் பொன்னுச்சாமித்தேவர் பாளையம்பட்டி

ஜமீன்தாராக விளங்கினார். இவருடைய மரபில் வந்தவரே மதுரையில் நான்காம் தமிழ்ச் சங்கத்தை அமைத்த பாண்டித்துரைத் தேவர் ஆவார். இப்பாண்டித்துரைத்தேவர் வாழ்ந்து சிறந்த அரண்மனை கௌரி விலாஸம் என்ற பெயரில் இராமநாதபுரம் அரண்மனை முன்பாக இன்றும் கலை அழகுடன் திகழ்கிறது. இப் பாண்டித்துரைத் தேவர் மாலை நேரங்களில் பொழுதைப் போக்கு வதற்கு வசதியாக மூலைக்கொத்தளத்தின் மேற்குப் பகுதியில் பிற் காலத்தில் வளமனை ஒன்றை அமைத்தார். சேதுபதிகளுக்கும் பாளையம்பட்டி ஜமீன்தாருக்கும் ஏற்பட்ட திருமணத் தொடர்பின் காரணமாக இராமநாதபுரம் மூலைக்கொத்தளம் பாளையம்பட்டி ஜமீன்தாருக்கு சீதனமாக வழங்கப்பட்டது என சொல்லப்படுகிறது. இம்மூலைக்கொத்தளத்தைப் பாளையம்பட்டி ஜமீன்தார் அவர்களிட மிருந்து கீழக்கரை செல்வந்தர் ஒருவர் விலைக்கு வாங்கியுள்ள தாகவும், அவர் சார்பாக பிற்காலத்தில் பாண்டித்துரைத் தேவர் அமைத்த மாளிகைப்பகுதி மட்டும் இடிக்கப்பட்டுவிட்டதாகவும் அறிய வருகிறது. மற்றஅமைப்புகள் மிகவும் சேதமுற்ற நிலையில், இன்றும் பல வரலாற்று நிகழ்ச்சிகளைத் தாங்கி நிற்கிறது.

இவ்வளவு பெருமைகளைப் பெற்ற இக்கொத்தளம் தமிழர்களின் கட்டடக் கலைக்கு ஓர் உதாரணமாகும்.

---

# நிலவிற்பனை ஆவணம்

**செ. மா. கணபதி**

நூலகர்

பண்டைத் தமிழகத்தில், பணிகளனைத்தும், அரசுப் பணிகளானாலும், தனியார் பணிகளானாலும் அதற்கென வகுக்கப்பட்ட விதிமுறைகளின்படி முறை தவறாது, ஒழுங்கு குலையாமல் நடந்து வந்தன. கிராம நிர்வாகம், நிலங்களின் எல்லைகளை வரையறுத்தல், கோயிற் பராமரிப்பு போன்ற பணிகளில் விதிமுறைகளும் மரபுகளும் கவனமாகவும் கண்டிப்பாகவும் கடைப்பிடிக்கப்பட்டு வந்தன. இதேபோன்று, நிலங்களை விற்பனை செய்வதிலும் அதற்கென வகுக்கப்பட்ட நடைமுறை விதிகளில் ஒன்றுகூடப் பிறழாது நேர்த்தியான முறையில் செய்யப்பட்டு வந்தது. இந்நில விற்பனை முறைக்கு எடுத்துக்காட்டாக, கழுகுமலையிலுள்ள (திருநெல்வேலி மாவட்டம்) கல்வெட்டொன்றினை இங்குக் கூறலாம். இக்கல்வெட்டு, பதினோராம் நூற்றாண்டில் பாண்டிய நாட்டில் நில விற்பனை எங்ஙனம் நடந்து வந்தது என்பதை நமக்கு எடுத்தியம்புகிறது.

திருநெல்வேலி மாவட்டம், கோவில்பட்டி வட்டத்திலுள்ளது கழுகுமலை என்னும் வரலாற்றுச் சிறப்பு மிக்கப் பேரூர். இவ்வூரிலுள்ள துணைப்பதிவாளர் அலுவலக வளாகத்திற்குள், கல்வெட்டுப் பொறிக்கப்பட்டுள்ள பழமையான கல் ஒன்று பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு, பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டாகும் கழுகுமலையிலுள்ள நூற்றுக்கும் மேலான கல்வெட்டுகளில், இதுவே மிக அதிக வரிகளைக் கொண்ட கல்வெட்டாகும்.

இஃது எழுபது வரிகளில் பொறிக்கப்பட்டுள்ளது. பாண்டி நாட்டில் சோழபாண்டியர் ஆட்சி நடைபெற்ற காலத்தில் பொறிக்கப்பட்டது. கழுகுமலை முருகன் கோயிலின் ஒரு பகுதியான

அகிலாண்டம்மன் சன்னதி, ஆதியில் சிவன் கோயிலாகத் திகழ்ந்தது. இச்சிவன் கோயிலைத் தோற்றுவித்தவர்கள் சோழபாண்டிய அரசர்களாவர். எனவே, இக்கல்வெட்டும் இச்சிவன் கோயிற் சுவரில் சோழபாண்டிய அரசர்களால் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் ஒன்றாகத்தான் இருக்கவேண்டும். நாளடைவில் இக்கல்வெட்டு, காலத்தின் கோலத்தால் கோயிற் சுவரிலிருந்து தனியாகப் பெயர்க்கப் பட்டோ அல்லது வேறு காரணத்தாலோ இன்று துணைப் பதிவாளர் அலுவலகத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்க வேண்டும். மேலும், இக்கல்வெட்டில் கூறப்பட்டுள்ள செய்தி, இத்துணைப் பதிவாளர் அலுவலகப் பணிக்குத் தொடர்புடைய செய்தியாக இருப்பதால், இக்கல்வெட்டினை இங்கேயே போற்றிப் பாதுகாத்துவருகின்றனர் எனலாம். கல்வெட்டு வருமாறு :

கல்வெட்டு :

1 ஸ்வஸ்திஸ்ரீ கொச்சடைப் பன்மரான
2 உடையார் ஸ்ரீ சுந்தரசொழ பாண்டிய
3 தெவர்க்கு யாண்டு உ௰௩ ஆவது ராஜரா
4 ஜப் பாண்டி நாட்டு முடிகொண்ட சோழ
5 வளநாட்டு நெச்சு(ற) நாட்டுப் (பெரு)நெச்
6 சுறத்து ஊரா(ல்)யிசைந்த ஊரொம் சொ
7 ழ மண்டலத்து ராஜராஜ வளநாட்டு ெ
8 சன்னிமங்கலக் கூற்றத்து ராஜசூடாம
9 ணிபுரத்து வியாபாரி களியனம்பலத்து கு
10 ள்ளூர்ப்படும் கன்னிக்குச்சிவயில் எ(ல்)லைக்
11 கு தெற்க்கும் சா(த்)தனெரி எ(ல்)லைக்கு மெ
12 ற்க்கும் நடுவு கிடந்த கிணறு ஒன்றும் இதற்
13 கு தலைமாறும் நிலன் மூன்று மாவும் ப
14 வித்ர மாணிக்க(பு)றத்துக்கு உட்பட்ட மரமும் ம
15 ரக்(கொ)வையும் கிணோக்கின கிணறும் கிண
16 ற்றில் நீரும் கல்லும் இம்மூன்றுமா நில
17 த்தில் உட்பட நிலத்து உடும்பொடி ஆமை

18 தவழ்விது உண்ணில(ம்) ஒழியாமெ விற்று விலை(க்)
19 கல(ம்)ஞ் செய்து குடுத்தொம் பெர்நெச்சுர
20 த்து ஊரா(ல்) இசைந்த ஊரொம் களியனம்பலத்
21 துக்கு இந்நிலம் மூன்றுமா விலை(க்)கற விற்று (இ) தி
22 லெய் விலை ஆவணச் சலாவண பொருள்
23 (வி)லை ஆவிதாகவும் இதுவெய் விலை . . .
24 பெ(ா)ருளாச . . . . .
25 கவும் இப்ப(ரி) . . . ல . .
26 கொ . . . . ரயிெ . . .
27 நெச்சுர நா
28 ட்டுப் பெர்நெ
29 ச்சுறத்து ப
30 வித்திர மா
31 ணிக்கன் பு
32 றத்து உ
33 ய்யக் கொ
34 ண்டான்
35 . . . . .
36 . . . . .
37 தந் ப(க்)கல்
38 சங்குளத் து
39 இடையந் ம
40 ணியந் சாத்
41 தனான இ(ரண)
42 சிங்க விர(செ)
43 ட்டியெந்
44 கொண்ட ஆ
45 டு நமக இ(வ்)வா
46 டு முப்பத் தொந்
47 றுக்கும் திங்

48 க டொறு(ம்) ஐஞ்ஞு
49 ாழி நெ(ய்)யும் எ
50 ந் விறதமுள்
51 ள அளவும் (ச)
52 ந்திராதித்(த)
53 (வ)லம் இ . . .
54 . . . . . .
55 . . . . த்துவித்
56 (ய)ந் மணி தெ
57 யெந் . . . . . . .
58 ளஞ் சிங்கவார எட்டியெந்
59 . . . .
60 ஊரார் சொல்ல எழுதினென் ஊர்கணக்கு ன
61 க்கன் துடர்படி எழு(த்)து இப்படி அறிவென்ச . .
62 சாலை இடைக்கரை எழுத்து இப்படி அ
63 றிவென் இவ்வூர் செந்தம் பூதன் எழுத்து
64 இப்படி அறிவென் இவ்வூர் ஏ நாதி[நாரண]
65 [னெ]ழுத்து இப்படி அறிவென் பெர்நெச்சுரத்
66 து வெள்ளரி எழுத்து இப்படி அறிவெ . . . டு
67 கவரையன் கூத்த(ன்) எழுத்து இப்படி அறிெ
68 வன் இடையந் செந்த[ன்] எழுத்து இப்படி
69 அறிவென் இவ்வூர் பொழன்[சிலம்]
70 .ன்[சுத்தடிவீர] செட்டி எழுத்து

கல்வெட்டு, ஸ்வஸ்திஸ்ரீ என்னும் மங்கலச் சொல்லோடு தொடங்குகிறது. முதலாவதாக, நிலம் விற்பனை செய்யப்பட்ட காலத்தில், பாண்டியநாட்டை ஆண்டுவந்த சோழபாண்டிய அரசனின் பெயரும், அவ்வரசனின் ஆட்சியாண்டும் சொல்லப்பட்டுள்ளது. இவ்வாட்சியாண்டே, நிலம் விற்பனை செய்யப்பட்ட ஆண்டாகும்.

இரண்டாவதாக, யாரால் யாருக்கு நிலம் விற்கப்பட்டது என்ற விபரம் தெளிவாகப் பொறிக்கப்பட்டுள்ளது.

மூன்றாவதாக, விற்கப்பட்ட நிலத்தின் அளவும் எல்லைகளும், நிலத்தோடு கூடிய பிற இனச் சொத்து விபரங்களும் கொடுக்கப் பட்டுள்ளன.

நான்காவதாக, விற்கப்பட்ட நிலத்தின் விலைத் தொகை, எந்தெந்தச் செயல்களுக்காக எவ்வெவ்வாறு பிரித்து வழங்கப்பட்டது என்ற விபரம் தரப்பட்டுள்ளது.

ஐந்தாவதாக, இந்நில விற்பனை ஆவணத்தை எழுதுவதற்கு விபரம் சொன்னவர்கள் யார், ஆவணத்தை எழுதியவர் யார் என்ற விபரம் கூறப்பட்டுள்ளது.

இறுதியாக, நிலவிற்பனையின்போது உடனிருந்து, நிலவிற் பனையை அறிந்து அறிவர்களாகக் (சாட்சிகளாக) கையொப்பமிட்ட முக்கியஸ்தர்களின் ஊரும் பேரும் பொறிக்கப்பட்டுள்ளன. இங்ஙனம், இக்கல்வெட்டு பல முக்கியமான வரலாற்றுச் செய்திகளைத் தாங்கி நிற்கிறது.

பதினோராம் நூற்றாண்டின் முற்பகுதியில், இந்நில விற்பனை நடந்த காலத்தில், பாண்டிய நாட்டை சோழ பாண்டிய அரசனான, சுந்தர சோழ பாண்டியன் ஆண்டு வந்தான். கல்வெட்டில், இவ் வரசன், 'கோச்சடைப்பன்மரான உடையார் ஸ்ரீசுந்தரசோழபாண்டிய தேவர்' என்று அழைக்கப்படுகிறான்.

முதல் இராசேந்திரன் கி.பி. 1018-இல் தன் மூத்த மகனான இராஜாதிராஜனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினான். இராஜேந்திரன் தனது மற்றுமொரு மகனை மதுரையில் சோழ பாண்டியனாக அமர்த்தியதாக, இராஜேந்திரனின் பத்தாம் ஆட்சியாண்டிற்குரிய திருவண்டார் கோயில் கல்வெட்டு *(363/1917)* கூறுகிறது. எனவே, இச்சோழபாண்டியன் மதுரையில் அரியணையேறிய காலம் கி.பி. **1021-22** ஆகும். இராஜேந்திரனின் மன்னார்கோயில் கல்வெட்டு **(112/1905)**, மதுரையில் ஆட்சி புரியும் சடையவர்மன்

உடையார் சுந்தரசோழபாண்டியன் என்பவன் இராஜேந்திரனின் மகனாவான் என்ற செய்தியையும், இராஜேந்திரனின் 24-ஆம் யாண்டு நாள் 128, சுந்தரசோழபாண்டியனின் 15-ஆம் யாண்டுக்குச் சமம் என்ற செய்தியையும் கூறுகிறது. திருவண்டார் கோயில் கல்வெட்டுடன் மன்னார்கோயில் கல்வெட்டை ஒப்பிட்டுப் பார்த்தால், இராஜேந்திரனின் இரண்டாவது மகன் கி.பி. 1021-22-ல் மதுரையில் சோழபாண்டியனாக அமர்த்தப்பட்டான் என்பதையும், அந்தச் சோழ பாண்டியனே சடையவர்மன் உடையார் சுந்தர சோழ பாண்டியன் ஆவான் என்பதையும், இராஜேந்திரனின் 24-ஆம் யாண்டு நாள் 128 என்பது கி.பி. 1035 ஆகும் என்பதையும், இவ்வாண்டு சுந்தர சோழ பாண்டியனின் 15-ஆம் ஆண்டுக்குச் சமம் என்பதையும், எனவே சுந்தரசோழபாண்டியன் கி.பி. 1021-ல் முடி சூடினான் என்பதையும் அறியலாம். சுந்தரசோழபாண்டியனின் 29-ஆவது ஆட்சியாண்டுப் பாடல் கல்வெட்டொன்று குறும்பூரிலும், 30-ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டொன்று ஆற்றூரிலும் உள்ளன. இக்கல்வெட்டுகளின் மூலம், கி.பி. 1051 வரை இவ்வரசன் சோழ பாண்டியனாக இருந்தான் எனக் கொள்ளலாம். பின்னாளில், இவன் 'இரண்டாம் இராஜேந்திரன்' என்ற பட்டம் புனைந்தான்.

சடையவர்மன் உடையார் சுந்தரசோழ பாண்டியனின் 23-வது ஆட்சியாண்டில் இக்கழுகுமலைக் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது. இவ்வாண்டு கி.பி. 1043 அல்லது 1044-க்குச் சமமாகும். இவ்வாண்டினையே நில விற்பனை நடந்த ஆண்டாகக் கொள்ளலாம்.

இந்நில விற்பனை, பண்டைக் கழுகுமலை ஊர்ச்சபையாரால் (பெருநெச்சுரத்து ஊராய் இசைந்த ஊரார்), சோழநாட்டிலுள்ள இராஜசூடாமணிபுரம் என்னும் ஊரைச் சேர்ந்த களியனம்பலம் என்னும் பெயர்கொண்ட வியாபாரி ஒருவனுக்கு விற்பனை செய்யப் பட்டுள்ளது. கல்வெட்டில் இச்செய்தி,

"ராஜராஜப் பாண்டிநாட்டு முடிகொண்ட
சோழவளநாட்டு நெச்சுரநாட்டு பெருநெச்
சுரத்து ஊராய் இசைந்த ஊரோம்,

சோழமண்டலத்து ராஜராஜ வளநாட்டு
சென்னிமங்கலக் கூற்றத்து ராஜசூடா
மணிபுரத்து வியாபாரி களியனம்பலத்துக்கு''

நிலத்தை விலைக்குற விற்று விலைக்கலஞ்செய்து கொடுத்ததாகக் கூறப்பட்டுள்ளது. இதன் மூலம், நிலத்தை விற்பனை செய்தவர்கள் பெருநெச்சுரத்து ஊர்ச்சபையார் என்பதும், நிலத்தை விலைக்கு வாங்கியவர் சோழநாட்டுச் சூடாமணிபுரத்து வியாபாரி களியனம் பலம் என்பதும் தெள்ளிதின் புலனாகிறது. நிலத்தின் அளவும் எல்லைகளும், நிலத்தோடு சேர்ந்த பிற இனச் சொத்துக்களும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

கல்வெட்டில், விற்கப்பட்ட நிலத்தின் விலை விபரம் பொறிக்கப் பட்டுள்ள இடத்தில், எழுத்துக்கள் இடையிடையே, சிதைந்து காணப்படுவதால், நிலத்தின் விலை பற்றிய முழுமையான செய்திகளைத் தெரிந்துகொள்வதில் சில சிரமங்கள் உள்ளன.

நிலவிலையின் ஒரு பகுதி, ஊர்க்கோயிலுக்கு நிவந்தமாக வழங்கப்பட்டுள்ளது. முப்பத்தொரு ஆடுகள் இரணசிங்கவீர செட்டியன் என்பவனிடம் வழங்கப்பட்டது. இவன் சங்குளம் என்னும் ஊரைச் சேர்ந்தவன். ஊரின் மணியக்காரனாகப் பணி புரிந்தவன். சாத்தன் என்னும் பட்டத்தைப் பெற்றவன். இவன், இவ்வாடுகளைப் புரந்து மாதந்தோறும் ஐந்து நாழி நெய்யினை இறைவனுக்கு நிவந்தமாக வழங்கவேண்டும் எனப் பணிக்கப் பட்டான். இப்பணி சூரிய சந்திரர் உள்ளளவும் நடைபெற வேண்டும் என ஆணை பிறப்பிக்கப்பட்டது. கல்வெட்டில், இவன், 'சங்குளத்து இடையன் மணியன் சாத்தனான இரணசிங்க வீர செட்டியன்' என்று அழைக்கப்படுகிறான்.

நிலவிற்பனை செய்த செயலை உறுதிபடுத்துகின்ற நிலவிற்பனை ஆவணம் (நில உரிமைப் பத்திரம்) எழுதுவதற்கான விவரங்களைப் பெருநெச்சுரத்து ஊர்ச்சபையார் கூற, நக்கன்துடர்படி என்பான் எழுதினான். இந்நக்கன்துடர்படி என்பவன், பெருநெச்சுரத்து ஊர்க்கணக்கனாகப் பணிபுரிந்து வந்தான். கல்வெட்டில், ''ஊரார்

சொல்ல எழுதினேன் ஊர்க்கணக்கு நக்கன் துடர்படி எழுத்து" என்று இச்செயல் குறிக்கப்பட்டுள்ளது.

நிலவிற்பனையின்போது உடனிருந்து, நிலவிற்பனையை அறிந்த சாட்சியாளர்களாகப் பலர் கையொப்பமிட்டுள்ளனர். அவர்களின் பெயர் மற்றும் ஊர் விவரம் வருமாறு :

| | பெயர் | ஊர் |
|---|---|---|
| 1 | சேந்தம்பூதன் | பெருநெச்சுரம் |
| 2 | ஏனாதிநாரணன் | ,, |
| 3 | வெள்ளரி | ,, |
| 4 | போழன் சிலம்பன் (சுத்தடிவீர) செட்டி | ,, |
| 5 | கவரையன் கூத்தன் | — |
| 6 | இடையன் சேந்தன் | — |

இவ்வாறாக, இக்கல்வெட்டில், நில விற்பனை நடந்த ஆண்டு, நிலத்தை விற்பனை செய்தவர்கள், விலைக்கு வாங்கியவர், விற்கப் பட்ட நிலத்தின் பரப்பளவு, எல்லைகள், நிலத்தோடு சேர்ந்த பிற இனச் சொத்துக்கள், நிலத்தின் விலை, இவ்விலை எச்செயல்களுக்கு யார் யாரிடம் வழங்கப்பட்டது என்ற விபரம், நிலவிற்பனை ஆவணம் தயாரித்ததில் முக்கிய பங்கு வகித்தவர்கள், இந்நில விற்பனையில் உடனிருந்த முக்கிய சாட்சிகளின் கையொப்பம் ஆகிய செய்திகள் மிகவும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

இதுகாறும் கூறிய செய்திகளின் மூலம், பதினோராம் நூற்றாண்டின் நில விற்பனை முறை, இன்றைய நில விற்பனை முறைக்கு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குவது தெரிய வருகிறது. பதினோராம் நூற்றாண்டில் நில விற்பனை ஆவணம் (நிலஉரிமைப் பத்திரம்) எந்த முறையில் என்னென்ன செய்திகளை மையமாக வைத்து எழுதப்பட்டு வந்ததோ, அதே முறையில் அதே செய்திகளை மையமாக வைத்துத்தான் (சில சிறு வேறுபாடுகள் தவிர) இன்றும் எழுதப்பட்டு வருகிறது. இருபதாம் நூற்றாண்டில், நிலம் வாங்கும்

விற்கும் பணியை மேற்பார்வையிட துணைப்பதிவாளர் என்று அரசு அலுவலர் நியமிக்கப்பட்டுள்ளார், பதினோராம் நூற்றாண்டில் இப்பணியை ஊர்ச்சபையாரே செய்து வந்தனர். நில விற்பனை ஆவணம் எழுதும் பணி இன்று ஆவணம் எழுதத் தெரிந்தவர்கள் அனைவராலும் செய்யப்பட்டு வருகிறது. ஆனால் அன்று, ஊர்க் கணக்கராகப் பணி புரிபவரே உரிமைப் பத்திரம் எழுதும் பணியை யும் செய்து வந்துள்ளார்.

பதினோராம் நூற்றாண்டில், பாண்டி நாட்டுக் கிராமங்களில் சோழ நாட்டு வணிகர்கள் வந்து வியாபாரம் செய்துள்ளனர் என்பதும், பாண்டி நாட்டிலுள்ள ஒரு கிராம நிலத்தை சோழ நாட்டுக் கிராமத்தைச் சேர்ந்த ஒருவர் விலைக்கு வாங்கியுள்ளார் என்பதும், இச்செய்திகளின் மூலம், சோழ நாட்டைச் சேர்ந்தவர்கள் பாண்டி நாட்டுக் கிராமங்களில் வந்து குடியேறியுள்ளனர் என்ற செய்தியும் புதிய வரலாற்றுச் செய்திகளாகும்.

---

## தொல்பொருள் ஆய்வுத்துறையின்
# அண்மைக் காலக் கண்டுபிடிப்புக்கள்

### அழகன்குளம் இரண்டாம் பருவ அகழாய்வு

அழகன்குளத்தில் இரண்டாம் பருவத்தில் மேற்கொள்ளப்பட்டு வரும் அகழ்வாராய்ச்சியில் பல அரிய தொல்பொருட்கள் வெளிக் கொணரப்பட்டுள்ளன. அவற்றுள் குறியீடுகளுடன் கூடிய, சுமார் 10 செ.மீ. கனச்செவ்வகத் தொல்பொருள் ஒன்றும், மூன்று நாணயங் களும் மிகச் சிறப்புடையன. இவற்றைத் தவிர ஏராளமான மணிகளும், கண்ணாடித்துண்டுகளும், சங்கு வளையல்களும், உள்நாட்டு மற்றும் வெளிநாட்டுப் பானை ஓடுகளும் கிடைத் துள்ளன.

மேற்குறிப்பிட்ட சிறந்தனவற்றுள் குறியீட்டுத் தொல்பொருள், இரௌலட்டட் வகை ஓட்டால் செய்யப்பட்டுள்ளது. இஃது எடைக் கல்லாகவோ, முத்திரையாகவோ, பகடைக்காயாகவோ இருக்கலா மென்று கருதப்படுகிறது. இஃது பகடைக்காய் எனக்கொண்டால் அதில் உள்ள குறியீடுகள் பண்டைத் தமிழர்கள் எழுதிவந்த எண்களாக இருத்தல் கூடும்.

தற்போது கிடைத்துள்ள மூன்று காசுகளில் ஒன்று உரோமானிய மன்னர் அர்கேடியஸ் காலத்தைச் சார்ந்ததாகும். மற்றொரு காசில் சைத்திய மரமும், சுற்றிலும் வேலியும் காணப்படுகின்றன. மூன்றாவது காசு மிகவும் சிதைந்த நிலையில் உள்ளது.

இங்கு கிடைத்துள்ள பானை ஓடுகளில் இரௌலட்டட் இன ஓட்டில் "சிரித" என்று பண்டைத் தமிழ் எழுத்தில் எழுதப்பட்டுள்ள பானை ஓடு குறிப்பிடத்தக்கதாகும். இதில் உள்ள எழுத்துக்கள் மட்கலத்தைச் சுடுவதற்கு முன்பே எழுதப்பட்டவையாகும். இவ்வகையில் முதல்முதலாகக் கிடைக்கும் ஓடு இதுவேயாகும்.

### நாயக்கர் கால ஓவியங்கள்

திருவரங்கம் அரங்கநாதர் கோயிலின் ஐந்தாம் திருச்சுற்றில் உள்ள வியாசர் மடத்தில், வேணுகோபாலன் சன்னதியில் முன் மண்டபத்தின் விதானத்தில், சுமார் 200 ஆண்டுகளுக்கு முற்பட்ட

அழகிய வண்ண ஓவியங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவ்வோவியத்தில் வலப்புறத்தில் மாத்வ பெரியார்களும், இடப்புறத்தில் நாயக்க மன்னரும், அவரது அமைச்சர்களும் வழிபட நடுவில் குழலூதும் கண்ணன் அழகாகக் காட்சியளிக்கிறார். இவ்வோவியங்களுக்கு மேற்பகுதியில் திருமாலின் 24 திருவடிவங்கள் தீட்டப்பட்டு, இவ்வடிவங்களின் பெயர்களும் வண்ணத்தில் எழுதப்பட்டுள்ளன.

## தொல்பழங்கால ஓவியங்கள்

அண்மையில், கோவைக்கருகே குமிட்டிபதி மலைப்பகுதியில் (மேற்குத் தொடர்ச்சி மலை) உள்ள முழை (குகை) ஒன்றில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட ஓவியங்கள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. இவ்வோவியங்கள் வெண் காவியால் தீட்டப்பட்டுள்ளன. இவ்வோவியங்களுள் முதல் ஓவியம் மனிதர்கள் வரிசையாக நின்று, நீண்ட பொருளொன்றை உயரத் தூக்கிப்பிடித்த நிலையில் தீட்டப்பட்டுள்ளது. அடுத்த ஓவியத்தில் யானையின்மீது வீரன் ஒருவன் படைக்கலமேந்தி அமர்ந்த நிலையிலும், யானையின் அருகே வீரன் ஒருவன் நின்ற நிலையிலும், மற்றொருவன் காவடி தூக்கிய நிலையிலும் தீட்டப்பட்டுள்ளனர். மேலும் பல ஓவியங்கள் இங்கு உள்ளன. ஆனால் அவை தெளிவின்றிக் காணப்படுகின்றன.

## பெருங்கற்கால ஈமப்பேழை

தருமபுரி மாவட்டம், கிருட்டிணகிரி அருகேயுள்ள கொங்கன் பாளையத்தில் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஈமப்பேழை கண்டு பிடிக்கப்பட்டது. இது 1.25 மீட்டர் நீளமும், 0.55 மீட்டர் அகலமும் உடையதாகும். மேல்பகுதி, அடிப்பகுதி என இரு பகுதிகளும் தனித்தனியே செய்யப்பட்டு இணைக்கப்படும் இப்பேழையில் அடிப்பகுதி மட்டுமே கிடைத்துள்ளது. பொதுவாக இவ்வகை பேழைகளில் 6 முதல் 12 கால்கள் பொருத்தப்பட்டிருக்கும். ஆனால் தற்போது கிடைத்துள்ள பேழையில் 24 கால்கள் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இக்கால்களில் துளைகளும், மேற்பகுதியில் அலங்காரக்கோடுகளும் அணி செய்கின்றன. இப்பேழை கண்டு பிடிக்கப்பட்ட இடத்தினருகே கத்தி, கோடரி, கருப்பு சிவப்பு பானை ஓடுகள், கிண்ணங்கள் போன்றவை கிடைத்துள்ளன.

———

இத்துறையின் அண்மைக்கால வெளியீடுகள்...

அருண்மொழி

தமிழக வரலாற்றுச் சின்னங்கள்

இராசராசன் வரலாற்றுக் காட்சிக் கூடம்

திருமலை மன்னர் கையேடு

இராமலிங்க விலாசம்
அரண்மனை அகழ்வைப்பகம் - கையேடு

ஆர்க்காடும் அகழ்வைப்பகமும்

இராமலிங்க விலாசம்
இராமாயண ஓவியக் குறிப்புகள்

தருமபுரியும் அகழ்வைப்பகமும்
THIRUMALAI NAICK PALACE (GUIDE)

---

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் அச்சகத்தில் அச்சிட்டு இத்துறை இயக்குநருக்காக திரு. க. குழந்தைவேலன், கல்வெட்டாய்வாளரால் வெளியிடப்பெற்றது.